# திருநெல்வேலி கம்பபாத சேகரன் இ. சங்கரன் இயற்றிய

# திருநெல்வேலி தல விநாயகர்

# பொள்ளாப் பிள்ளையார் சந்திரகலா மாலை

உலகில் எழுதும் எழுத்தெல்லாம் உருவம் வட்டம் கோடுஎனும்
நிலையைக் காட்டும் வடிவான சுழியில் உறையும் எம்மானே
அலையும் காற்றை உள்அடக்கி ஆறு தலத்தில் குண்டலியை
நிலைக்க நிறுத்தும் கலைதருவாய் நெல்லை பொள்ளா விநாயகனே! 1.

சிலம்பு புலம்பு திருவடியும் சிவந்த பட்டு திருவரையும்
உலகு புரக்கும் பெருவயிறும் அஞ்சு கரமும் நால்வாயும்
இலங்கு முக்கண் விரிசெவியும் ஒற்றை மருப்புத் திருமுகமும்
விளங்கு அழகை காண அருள்வாய் நெல்லை பொள்ளா விநாயகனே! 2.

எருக்கு அறுகு இதழிவன்னி முல்லை மத்தம் செங்கழுநீர்
உருளை மகிழும் செம்பருத்தி புன்னை அலரி தவழ்மார்பா
உருகி உன்னை யான்பாட உன்தாள் நாடி சரணடைந்தேன்
திருக்கண் சாற்றி அருள்செய்வாய் நெல்லை பொள்ளா விநாயகனே! 3.

அடியேன் பாவத் தறிபறித்து வினையாம் விலங்கை முறித்திட்டு
நெடிய மாயைக் கடல்உழக்கி நிலைத்த மலமாம் மலைநொறுக்கி
நெடுஞ்சீர் தமிழாம் மதம் பொழிந்து நிறைவாம் இன்பம் தந்தருளே
நெடுங்கை வதன எம்மானே நெல்லை பொள்ளா விநாயகனே! 4.

மலையே வில்லாய் அரவுநாணாய் மாலே கணையாய் மறைப்பரியாய்
கலையாள் கணவன் சாரதியாய் ககனத் தேவர் தேராக
அலையும் மூன்று எயிலதனை அழிக்க சென்ற அரனார்தம்
நிலத்தேர் அச்சை முறித்தவன்தான் நெல்லை பொள்ளா விநாயகனே! 5.

வரையே மத்தாய் பணிகயிறாய் வானின் மதியை தூணாக்கி
உரம்சேர் கமடம் தாங்கிடவே உம்பர் அசுரர் பாற்கடலை
திறமாய் கடைய எழுவிடத்தை கழுத்தில் திகழ வைத்தார்க்கு
உரத்து ஆமை ஓடளித்தான் நெல்லை பொள்ளா விநாயகனே! 6.

பருதிச் செல்வன் உடுவேந்தன் பாரின் மைந்தன் மதிபுதல்வன்
குருவாம் பொன்னன் வெள்ளியுடன் காக்கைப் பரியோன் இருஅரவும்
அருங்கோள் நாளும் நலம்புரிய அருள்வாய் ஆனை முகத்தோனே
புரிசை சூழ்ந்த பெருநகராம் நெல்லை பொள்ளா விநாயகனே! 7.

கூடல் சங்கம் கண்டதமிழ் நீரில் நெருப்பில் சுடருதமிழ்
ஆடல் புரிவான் காத்ததமிழ் அதனை வளர்த்த புலவோர்கள்
பாடல் பதிந்த பன்னூலை தொகுத்து அடியேன் பதிப்பிக்க
நாடி தொழுதேன் அருள்புரிவாய் நெல்லை பொள்ளா விநாயகனே! 8.

பொன்னை மனையை மனைவிமக்கள் பொருளை உண்மை எனநினைந்து
தன்நாள் வீணாய் கழியாது தீர ஆய்ந்து உனைஅடைந்தேன்
மன்னும் வாழ்வு எதுஎன்று மனத்தால் உணர அருள்புரிவாய்
தென்றல் உலாவு வீதிநிறை நெல்லை பொள்ளா விநாயகனே! 9.

கண்ணால் உன்தாள் காணவேண்டும் காதால் உன்சீர் கேட்கவேண்டும்
திண்ணக் காலால் திருத்தளியை தினமும் சுற்றி வரவேண்டும்
விண்மண் போற்றும் உன்சீர்த்தி வியந்து நாவால் பாடவேண்டும்
எண்ணம் இதனை தந்தருள்வாய் நெல்லை பொள்ளா விநாயகனே! 10.

மலைசூழ் மந்திக் கோடுவீரம் அழகு பாண்டி கட்டிவைத்த
கலைசேர் அழகு இடைநாழி அமர்ந்து காட்சி தந்தருள்வான்
நிலைத்த தமிழால் சம்பந்தன் இதழி சிந்து பாபோற்றும்
மலையா மாந்தர் வாழ்நகராம் நெல்லை பொள்ளா விநாயகனே! 11.

வெற்பே ஏடாய் வெண்கோடு எழுது கோலாய் மதிகுலத்து
சுற்றம் நடத்து மாபோரை பொற்பாய் வரைந்த தனிமுதலே
உற்ற பிணிக்கு அருமருந்தே உயிர்க்கு உற்ற ஆரமுதே
பற்றில் தவத்தோர் தொழுதேத்தும் நெல்லை பொள்ளா விநாயகனே! 12.

விகட கூத்து ஆடியமால் விரும்பும் ஆழி அளித்தவனே
அகவல் பாடும் அவ்வையாரை அரனார் கயிலை சேர்த்தவனே
குகனார் வேண்ட யானையாகி குறத்தி முன்னால் வந்தவனே
நிகரில் வரங்கள் தந்தருள்வாய் நெல்லை பொள்ளா விநாயகனே! 13.

நகைத்த மதியை சாபமிட்டும் அவன்செய் பூசை ஏற்றவனே
தகைசால் தவத்து குடமுனிவன் கரம்சேர் கெண்டி கவிழ்த்தவனே
பகையாம் மிடியின் துயர்கடலை கடக்க புணையாம் பதம்அருள்வாய்
செகத்தின் திலகம் எனத்திகழும் நெல்லை பொள்ளா விநாயகனே! 14.

கரும்பும் பயறும் மோதகமும் கனிகள் பால்தேன் பணியாரம்
உருண்டை வகைகள் அவல்பொரியும் உருகு நெய்யும் உவந்தளித்தேன்
கருவில் வாரா நெறிகாட்டி கருணை செய்வாய் தான்தோன்றி
உருவாய் அமர்ந்த மதக்களிறே நெல்லை பொள்ளா விநாயகனே! 15.

கல்வி ஞானம் புகழ்வீரம் கழனி மனைவி மக்களுடன்
நல்ல மனமும் பிணிஇல்லா உடலும் தொழும்பர் கூட்டுறவும்
செல்வ வளமும் உனைமறவா உளமும் உரமும் தந்தருள்வாய்
செல்வம் மிக்கார் வாழ்நகராம் நெல்லை பொள்ளா விநாயகனே! 16.

முற்றும்